# திருப்புகழமிர்தம்

## மலர் 11, இதழ் 9

## December 1946

Record no. 166

ஓம்குஹாய நம!

# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் ௰௧ Vol 11 | விய ௵ மார்கழி ௴ 1௳ டிஸம்பர் 1946 | இதழ் 9. No 9.

## திருப்புகழ்.

### கூந்தலூர்.

தரையினில் வெகுவழி சார்ந்த மூடனை
வெறியனை நிறைபொறை வேண்டி டாமத
சடலனை மகிமைகள் தாழ்ந்த வீணனை மிகுகேள்வி—
தவநெறி தனைவிடு தாண்டு காலியை
யவமதி யதனில்போ லாங்கு தீமைசெய்
சமடனை வலியஅ சாங்க மாகிய தமியேனை;
விரைசெறி குழலியர் வீம்பு நாரியர்
மதிமுக வனிதையர் வாஞ்சை மோகியர்
விழிவலை மகளிரோ டாங்கு கூடிய வினையேனை—
வெகுமல ரதுகொடு வேண்டி யாகிலு
மொருமல ரிலைகொடு மோர்ந்து யானுனை
விதமுறு பரிவொடு வீழ்ந்து தாள்தொழ அருள்வாயே;
ஒருபது சிரமிசை போந்த ராவண
னிருபது புயமுட னேந்து மேதியு
மொருகணை தனிலற வாங்கு மாயவன் மருகோனே—
உனதடி யவர்புக ழாய்ந்த நூலின
ரமரர்கள் முனிவர்க ளீந்த பாலகர்
உயர்கதி பெறஅரு ளோங்கு மாமயி லுறைவோனே;

குரைகழல் பணிவோடு கூம்பி டார்பொரு
களமிசை யறமது தீர்ந்த சூரர்கள்
குலமுழு தனைவரு மாய்ந்து தூளெழ முனிவோனே-
கொடுவிட மதுதனை வாங்கி யேதிரு
மிடறினி லிருவென ஏந்து மீசுரர்
குருபர னெனவரு கூந்த லூருறை பெருமாளே.

பதவுரை.

ஒருபது சிரமிசை போந்த ராவணன் - பத்துத் தலைகளுடன் கூடி வலிமிகுந்த இராவணனது, இருபது புயமுடன் - இருபது புயங்களோடு, ஏந்தும் எஃதியும் - ஏந்துகின்ற வாளும், ஒரு கணை தனில் அற - ஒரே கணையினால் அற்று விழ, வாங்கும் மாயவன் - வில்லை வளைத்த ஸ்ரீராமமூர்த்தியின், மருகோனே - திருமருகரே! உனது அடியவர் - தேவரீருடைய அடியார்களும், புகழ் ஆய்ந்த நூலினர் - திருப்புகழை ஆராய்ந்த கலைஞரும், அமரர்கள் - தேவர்களும், முனிவர்கள் - தவசிலர்களும், ஈந்த பாலகர் - பராசர் பெற்ற ஆறு குமாரர்களும், உயர் கதி பெற - உயர்ந்த சிவகதி பெற்று உய்ய, அருள் ஓங்கும் - திருவருளைத் தரும், மா மயில் உறைவோனே - சிறந்த மயில்மீது எழுந்தருளுபவரே! குரைகழல் - வீரக் கழல் ஒலிக்கின்ற திருவடியை, பணிவொடு கூம்பிடார் - தாழ்வோடு வணங்காதவராய், பொரு களமிசை - போர்க்களத்திலே, அறம் அது தீர்ந்த சூரர்கள் - தரும முறையினின்றும் நீங்கிய சூராதி யவுணர்களது, குலம் முழுது அனைவரும் மாய்ந்து தூள் எழ - குலமானது முற்றும் மடிந்து துகள் எழுமாறு, முனிவோனே - முனிவு கொண்டவரே! கொடு விடம் அது தனை வாங்கியே - கொடுமையான ஆலாகலவிடத்தை திருக்கரத்தில் (கருணையுடன்) வாங்கி, திரு மிடறினில் இரு என ஏந்தும் ஈசுரர் - அழகிய கண்டத்தில் இருக்கக் கடவாயென்று கட்டளை யிட்டு அதனைத் தாங்குகின்ற சிவபெருமானுடைய, குருபரன் எனவரு - குருமூர்த்தியென்று புகழ வருகின்ற, கூந்தலூர் உறை பெருமாளே - கூந்தலூரில் வாழுகின்ற பெருமையின் மிக்கவரே! தரையினில் - மண்ணுலகில், வெகுவழி சார்ந்த மூடனை - அநேகவழிகளிற் போய் கெடுகின்ற அறிவில்லாதவனை, வெறியனை - வெறிபிடித்தவனை, நிறை பொறை வேண்டிடா - நீதி பொறுமைமுதலிய நற்குணங்களை விரும்பாத, மத சடலனை - மதங் கொண்ட சரீரத்தை யுடையவனை, மகிமைகள் தாழ்ந்த வீணனை - ஒருமகிமையும் இல்லாத தாழ்ந்துபோன பயனற்றவனை, மிகு கேள்வி - மிகுந்த நல்ல கேள்வியையும், தவநெறி தனை விடு - தவ நெறியையும்விட்ட, தூண்டு காலியை - விடுகாலியை, அவமதி அதனில் - உலகமெல்லாம் அவமதிக்குமாறு, பொலாங்கு தீமை செய் சமடனை - பொல்லாங்குமிக்க தீமைகளைப் புரிகின்ற மூடனை, வலிய அசாங்கம் ஆகிய தமியேனை - மிக ஒழுங்கீனமுடைய துணையற்றவனை, விரைசெறிகுழலியர் - பரிமளமிகுந்த கூந்தலை யுடையவர்களும், வீம்புநாரியர் - பெருமைபேசும் பெண்களும், மதிமுக வனிதையர் - சந்திரனையொத்த முகமுடையவர்களும், வாஞ்சை மோகியர் - ஆசைமயக்க முள்ளவர்களும், விழிவலை மகளிர் ஒடு - கண்ணாகிய வலையை யுடையவர்களுமாகிய விலைமகளிருடன், கூடிய - பொருந்திய, (ஆங்கு - இடைச்சொல்) வினையேனை - தீவினை மிகுந்தவனை, வெகுமலர் அதுகொடுவேண்டி ஆகிலும் - அநேகமலர்களைக்கொண்டு அருளை வேண்டியாயினும், ஒருமலர் இலைகொடு - ஒருமலர் அல்லது பச்சிலைகொண்டாவதும், ஓர்ந்து - தேவரீரை நினைந்து, யான் உனை - அடியேன் உம்மை, விதமுறு பரிவொடு - தலையன்பு முதலிய வகைகளை யுடைய அன்போடு, வீழ்ந்து தாள் தொழ - உமது திருவடி மிசை வீழ்ந்து பணியுமாறு, அருள்வாயே - அருள்புரிவீர்.

பொழிப்புரை.

வலிமை மிகுந்த இராவணனுடைய, பத்துத் தலைகளும், இருபது புயங்களும், அவன் ஏந்திய வாளாயுதமும் ஒரு கணையில் அற்றுவிழ வில்லை வளைத்தருளிய ஸ்ரீ ராமச்சந்திரருடைய திருமருகரே! அடியார்களும் திருப்புகழை யாராய்ந்த கலைஞரும் தேவர்களும் முனிபுங்கவர்களும் பராசகுமாரர்களாகிய அறுவரும் உயர்ந்த சிவகதி பெற்று உய்ய திருவருள் புரியும் சிறந்த மயின்மீது உறைபவரே! வீரக்கழலொலிக்கின்ற திருவடியைத் தாழ்மையுடன் வணங்கிடாதவராய் போர்க்களத்தில் தரும நெறியினின்றும் நீங்கிய சூராதி யவுணர்களது குலம் முழுவதும் மடிந்து துகள் பட முனிவு செய்தவரே! கொடிய ஆலாகல விடத்தை வாங்கி கண்டத்தில் இருக்குமாறு பணித்து (உலகமெல்லாமுய்ய அருள் புரிந்து) தாங்கிய சிவபெருமானுக்குக் குருமூர்த்தி யென்று புகழுடன் கூந்தலூர் என்னுந் திருத்தலத்தில் வாழ்கின்ற பெருமித முடையவரே! இப் பூவுலகில் பல வழிகளிற்போய் அலைகின்ற அறிவில்லாதவனை, வெறி பிடித்தவனை, நீதி பொறுமை முதலிய நற்குணங்களை விரும்பாது மதங்கொண்ட உடம்பை யுடையவனை, ஒரு வித மகிமையுமின்றி தாழ்ந்த பயனற்றவனை, மிகுந்த நல்ல கேள்விகளையும் தவநெறியையும் விட்டு இங்கும் அங்குமா

கத் தாண்டுகின்ற காலியை, உலகம் அவமதி செய்கின்ற பொல்லாங்காகிய தீமைகளைச் செய்யும் மூடனை, மிக்க ஒழுங்கினமுடைய துணையற்றவனை, வாசனை மிக்க கூந்தலை யுடையவரும் வீண் பெருமை பேசுபவரும் சந்திரனை யொத்த முகமுடையவரும் ஆசை மயக்கமுடையவரும் கண்ணாகிய வலையை யுடையவருமாகிய விலைமாதருடன் கூடிய தீவினையேனை, அநேக மலர்களைக் கொண்டு அர்ச்சித்தாயினும், அல்லது ஒரு மலராவது பச்சிலையாவது கொண்டு அர்ச்சித்தாயினும் உமது திருவடியை நினைந்து, தலையன்பு முதலிய வகைகளுடன் கூடிய அன்போடு பாத மலர்மீது வீழ்ந்து வணங்கத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை.

தரையினில் வேகுவழி சார்ந்த மூடனை:—

திருவருளைப் பெறவிரும்புவோர் ஒரு சிறந்த வழியில் உறைப்புடன் நிற்றல் வேண்டும். ஏகதேவ வழிபாடும் இன்றியமையாததாம். பலவழியிற் படர்வோர்க்கு பரகதி ஒருபோதும் கைகூடாது. கிணறு வெட்ட முயற்சிப்பா னொருவன் ஒரு இடத்தில் 10 அடி ஆழம் வெட்டி நீர் காணவில்லை யென்று கருதி, பிறிதோரிடத்தில் 10 அடி ஆழம் வெட்டி, மீளவும் வேறு இடத்தில் 10 அடி ஆழம் வெட்டி இப்படியாக பத்து இடத்தில் 100 அடி ஆழம் வெட்டி நீர் காணாது அயர்ந்து போயினான். ஒரே இடத்தில் வெட்டி இருப்பானாயின் 50 அடி ஆழத்திலுங்கூட தண்ணீரைக் கண்டிருப்பான். துன்பமுங் குறைந்திருக்கும். அதுபோலே ஒருவழியில் உறுதியுடன் நில்லாமல் பலவழி சென்று, பல உபாசனை செய்து, பல குருமார்களை யடுத்து பலப்பல எண்ணமிட்டு பலனற்றுப் போகின்றனர்.

"பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொன்மார்க்கங் கண்டு துலங்குநாள் எந்நாளோ"

என்பார் தாயுமானார். ஆதலின் உறுதியுடன் ஒருவழியில் அசைவற்று நிற்றல் வேண்டும்.

வெறியனை:—

வெறி-மயக்கம், மயங்கியவன் ஒன்றை மற்றொன்றாகக்



கருதுவன். கள்வெறி கொண்டவனுக்கு விளக்குத்தூண் மனிதனைகத் தெரியும். அங்ஙனமே காமவெறி கொண்டவனுக்கும் துக்பம் இன்பமாகத் தெரியும். நன்மையைத் தீமையாகவும், தீமையை நன்மையாகவும், துன்பத்தை யின்பமாகவும், இன்பத்தைத் துன்பமாகவும் மாறியறிகின்ற வெறியை வெல்லுதல் வேண்டும்.

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும் வேலவனே. —அநுபூதி.

நிறை பொறை வேண்டிடா மத சடலனை:—

நிறை - நீதி, திண்மை. நிறை, பொறை, தேற்றம், நீதி, சால்பு இவ்வைந்தும் ஆடவர்க்குரிய குணங்களாம்.

தவநெறி தனைவிடு தாண்டு காலியை:—

தவமாகிய நெறி என்று கொள்க. இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இறைவன் திருவருளைப் பெறுவதற்குத் தவம் வழியாக நிற்கும்.

"தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்குவழி அருள்வாயே" —திருப்புகழ்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்துறையூர் என்னுந் திருத்தலத்தில் இறைவன்பால் தவநெறியை வேண்டுகின்றனர்.

மத்தம் மதயானை யின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
பத்தர் பயின்றேத்திப் பரவுந் துறையூர்
அத்தா வுனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே.

ஒருவழியிலும் உறைத்துநிற்காமல் இங்கும் அங்குமாக தாண்டுவதனால் "தாண்டுகாலி" என்றனர்.

சமடன்:— சமடன்:- அறியாமையோடு கூடியவன். தன்னையும், தனக்குத் தலைவனாகிய இறைவனையும், தான் வந்த வரவையும், செல்ல வேண்டிய கதியையும் அறியாது கிடத்தலை இது தெரிவிக்கின்றது.

வேகுமலரதுகோடு வேண்டியாகிலும்
ஒருமலரிலைகோடும் ..............தொழ அருள்வாயே:—

இறைவனை மலரிட்டு வணங்குவது சிறந்த வழிபாடா

கும். "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" என்பார் திருமூலர்.

திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்
தீவண்ணர் திறம்ஒருகால் பேசாராகில்
ஒருகாலும் திருக்கோயில் சூழாராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியாராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின் றாரே. —அப்பர்.

ஆதலின் அதிகாலையில் எழுந்து நீராடி நிரம்ப மலர்களை எடுத்து இறைவனை வழிபடுதல் வேண்டும். அது முடியாதவர்கள் ஒரு மலராவது எடுத்து இறைவனுக்குச்சாத்த வேண்டும். அதுவும் கைகூடாதவர்கள் ஒரு பச்சிலையாவது சாத்தி வணங்கவேண்டும். "யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை", "போதும் பெறாவிடில் பச்சிலையுண்டு".

**விதமுறு பரிவு:—**

விதம் - வகை; பரிவு - அன்பு. அன்பு பக்தி என்பன ஒரு பொருளைக் குறிப்பன. அன்பு என்பது உள்ளத்தில் நிகழும் நெகிழ்ச்சியாம். அன்பு ஒருவர் வெளிப்படையாகக் காணற்பாலதன்று; குடத்துள் விளக்கும், உறையுள் வாளும் போல் கிடப்பது. அன்பு மேலிடும்போது தன்வசம் அழிதலும், மயிர்க்கால்கள் தோறும் திவலை உண்டாகப் புளகமெய்தலும், கண்ணீர் மல்குதலும், விம்மலும், நாத்தழுதழுத்தலும், உரை தடுமாறலும் பிறவுமாகும்.

இந்த அன்பினாலன்றி வேறு எந்த வகையாலும் அன்பு வடிவாகிய இறைவனை யடைய ஒண்ணாது.

தேவ தேவன்மெய்ச் சேவகன் தென்பெருந்துறை நாயகன்
மூவ ராலு மறியொணா முதலாய வானந்த மூர்த்தியான்
யாவ ராயினும் அன்ப ரன்றி யறியொணா மலர்ச்சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னி மன்னிச் சுடருமே.
—திருவாசகம்.

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியை யெய்த வொண்ணாதே. —திருமந்திரம்.



ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனுங் காணா அரன்.

அன்பு மூன்று வகைப்படும்.

(1) தலையன்பு:- இறைவனது நாமத்தைக் கேட்டவுடன் வசமழிதல்.

(2) இடையன்பு:- இறைவனைக் கண்டவுன் வசமழிதல்.

(3) கடையன்பு:- இறைவனைக்கூடியவுடன் வசமழிதல்.

இறைவனது நாமத்தை கேட்டவுடன் வசமழியும் அன்பர்கட்கு கண்டவுடனும், கூடியவுடனும் எய்தும் அன்பின் பெருக்கை யாரே அளக்கவல்லார்?

தலையன்பு தைலதாரைபோல், எப்போதும் இடையறாது உள்ளம் உருகி நெகிழ்ந்துகொண்டிருக்கும்.

இடையன்பு, அழலிடைப்பட்ட மெழுகுபோல் சிறிது தாமதமாக உருகுவது.

கடையன்பு, வெயிலில் அரக்கு உருகுவதுபோல் நெடுநேரம் இறைவன் சிந்தனையாலும் இறைவன் திருவுலாக் காட்சியாலும் மிகவுந் தாமதமாக உருகுவது.

இந்த அன்புநெறியில் முதலிடம் பெற்றவர் கண்ணப்ப நாயனார்.

"தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவில் அன்புருவ மானார்"

அதனாலன்றோ காரைக்காலம்மையார், "இறவாத இன்ப அன்பு வேண்டி" பெற்றனர். வீரவாகுதேவரும்,

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவிலும் வெஃகேன்
மால யன்பெறும் பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.

என்று ஆறுமுகத்தண்ணலிடம் வரங் கேட்டனர். அன்பினில் விளையும் ஆரமுது இறைவன்.

**ஈந்த பாலகர்:—**

பராசமுனிவர்பெற்ற அறுவர். அவர்கள் தப்தர், அநந்தர், நந்தி, சதுர்முகர், சக்ரபாணி, மாலி எனப்படுவர். இவ்வாறுசிறார்களும் இளம்பருவத்தில் மீன்கள் இறந்துபடு

மாறு ஒருகுளத்தில் கலக்கி விளையாடினார்கள்; அதுகண்ட பராசர், "இம்மீன்கள் இறக்குமாறு நீர் விளையாடியபடியால் சரவணப்பொய்கையில் மீன்வடிவாகக் கடவீர்கள்" என்று சபித்தனர். முனிகுமாரர்கள் பிதாவை வணங்கி சாபத்தீர்வு கேட்க, "சரவணத்தில் முருகவேள் திருவவதாரம புரிவர்; ஆதிபராசக்தியின் ஞானப்பாலை யுண்பர்; அத்தருணம் முருகவேளுண்ட எச்சிற்பால் சரவணத்திற் கலக்கும். அதனை யுண்டு தொல்லுருபெற்று, நன்மை யடைவீர்கள்" என்று அருள்புரிந்தார். அவ்வண்ணமே, சரவணப்பொய்கையில், மீன்வடிவம் பெற்றனர். கந்தக்கடவுளுக்குக் கௌரி தந்த திருஞானப்பால் ஒழுக அது சரவணத்திற் கலந்தது. அதனை யுண்டவுடன் அறுவருக்கும் மீன்வடிவம் மாறியது. அவர்கள் சிவபெருமானைத் தொழுது நின்றனர். சிவபெருமான் கருணைபுரிந்து "திருப்பரங்குன்றஞ் சென்று தவம்புரியுங்கள்; அங்கு முருகன் வந்து அருள்புரிவன்" என்றனர். அவ்வண்ணமே அருள் பெற்றனர்.

அன்ன றுவருமா யெழுந்தகன் பொய்கைவிட் டமலன்
முன்னுய் வணங்கினர் போற்றலும் முனிமைந்தர்கள் பரங்கோ
டென்னு வுரைபெறு குன்றிடை யிருந்தே தவம்புரிமின்
சின்னுள் மிசைஇவன் வந்தருள் செயுமென் றருள்செய்தான்.
— கந்தபுராணம்.

கோடு விடமதுதனை வாங்கியே:—

பாற்கடலிற் றோன்றிய ஆலாலவிடத்தைக் கண்டு அமரர்கள் அஞ்சி அரனிடம் முறையிட, சிவபெருமான் சுந்தரரை "அவ்விடத்தை இவ்விடத்திற்குக் கொணர்வாய்" என்று பணித்தருளினர். சுந்தரர் சென்று மாலயனுதி வானவர் நெருங்க முடியாத பயங்கரமான விடத்தை நாவல்பழம்போலே திரட்டிக்கொணர்ந்து அரனிடம் அளித்தனர். அதனை வாங்கி பெருமான் கண்டத்தில் தரித்து நீலகண்டராக விளங்கினர்.

### கருத்துரை.

திருமால் மருகரே! மயில்வாகனரே! சூரகுலகாலரே! சிவகுருவே! கூந்தலூர் மேவிய குமாரக்கடவுளே! அடியேன் தேவரீரை அன்புடன் வழிபட்டு உய்ய அருள்புரிவீர்.

ஓம் குஹாய நம:

# கந்தரலங்காரம்

(ஈசுஅ-ம் பக்கத் தொடர்ச்சி.)

பங்கே ருகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதனை
தங்காலி லிட்ட தறிந்தில னேதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே. (89)

### பதவுரை

பங்கேருகன் - தாமரைமலரில் வாழும் பிரமதேவன், எனை பட்டு ஓலையில் இட - அடியேனைத் தனது விதிஏட்டில் எழுத, பண்டு தம் காலில் - முற்காலத்தில் தனதுகாலில், தனை இட்டது அறியானே - விலங்கு பூட்டியதை அறியானே, (ஒருவேளை அதை மறந்து எனக்கு விதிவிலக்கெழுதி இன்னொரு பிறப்பைத்தர நினைவானுயின் அதனை) தனிவேல் எடுத்து - ஒப்பற்ற வேலாயுதத்தை எடுத்து, பொங்கு ஓதம் வாய்விட - பொங்கும்படியான கடலானது வாய்விட்டலறவும், பொன்னம் சிலம்பு புலம்ப வரும் - பொன்னுருவாய கிரவுஞ்சகிரி கதறவும் வருகின்ற, எம்கோன் அறியின் - எமது இறைவராகிய ஆறுமுகப்பெருமான் அறிவாராயின், இனி - இனிமேல், நான்முகனுக்கு - நான்குமுகங்களை யுடைய பிரமனுக்கு, இரு விலங்கே - இரண்டு விலங்குகள் பூட்டப்படும்.

### விரிவுரை.

பங்கேருகன் எனைப் பட்டோலையிலிட:—

பங்கேருகம் - தாமரை. தாமரையில் வாழ்வதனுல் பிரமதேவன் பங்கேருகன் எனப் பேர்பெற்றனன். உயிர்களுக்கு அவ்வுயிர்கள் முற்பிறப்புக்களில் புரிந்த பாவபுண்ணியங்கட்குத் தக்கவாறு, நன்மை தீமைகளைத் துய்க்குமாறு விதிப்பவன் பிரமதேவனும். ஆதலின் "விதி" எனப்படுவன். அவ்விதிப்படியே எல்லாம் நடைபெறும்.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

என்பார் திருவள்ளுவர்.

"விதி தலையிலெழுதியும் அனைவயி னுறவிடுவதனுலே" - திருப்புகழ்.

பாவகன்மங்களைப் புரிந்தோரையும், புண்ணியங்களைக் காமியமாகப் புரிந்தோரையுமே பிரமன் தனது கணக்கில் குறித்து எழுதவேண்டும். இருவினையொப்பு எய்தி, மல பரிபாகமுற்று, ஜீவபோதம் நீங்கப்பெற்று, பார்த்த விட மெல்லாம் பரமாக நோக்கி சிவமயமான ஞானச் செல்வர் களைப் பிரமன் தன்கணக்கில் எழுதக் கூடாது. ஆதலின் அடிகளார் இதனையுணர்த்துவாரானார்.

பண்டுதனை தங்காலிலிட்ட தறிந்திலனோ?:—

"பிரமதேவன் இருவினையொப்பு மலபரிபாகமுற்று முருகவேள் திருவருள் மயமாக இருக்கும் அடியேனை நன்கு தெரிந்துகொள்ளாமல், மீண்டும் பிறப்பு இறப்பில் செல்லுமாறு என்னை விதிக்கக் கருதுவனோ? ஏன்? அவனு டைய காலில் கந்தப் பெருமான் முன்னே விலங்கிட்டு சிறையிலடைத்ததை யறியமாட்டானோ?" என்கின்றார்.

முருகப்பெருமான் தமது இளவல்களாகிய நவ வீரர் கள் புடைசூழ திருக்கைலை மலையின் திருக் கோபுர வாச லில் எழுந்தருளி யிருந்தனர். சிவபெருமானை வழிபட வந்த மாலும் இந்திரனும் மற்றை வானவரும் முழுமுதலாம் முருகவேளை அடிபணிந்து அருள் பெற்றுச் சென்றனர். "நான் படைப்புக் கடவுள்" என்று இறுமாந்து வந்த பிரம தேவன் எம்பெருமானைப் பணியாது சென்றனன். உட் சென்று அம்மையப்பரைத் தொழுது திரும்பினன். அப் போதும் பணியாது கண்டிலன்போற் சென்றனன். அது கண்ட ஆறுமுகப் பெருமான் அயனுக்கு அறிவுச் சுடர் தூண்டுவான்கருதி வீரவாகுதேவரை யனுப்பி அழைத்து, 'நீ யாவன்?' என்றனர். பிரமன் 'யான் வேதன்' என்று கூறி னன். முருகவேள், 'நீ வேதனுயின் வேதம் வருமோ?' என்று வினவினர். வாணிகேள்வன் "வரும்" என்றனன். "அங்ஙன மாயின் வேதம் ஓதுக" என்றார். அயன் "ஓம்" என்று கூறி வேதம் ஓதத் தொடங்கினன். கந்தவேள் முறுவலித்து, "பிரமனே! நில். முன்னே கூறிய பிரணவ மொழிக்குப் பொருள்கூறிப் பின்னே வேதத்தை ஓதுக" என்றனர்.

தாமரைத்தலை யிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாமறைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக் குமரவேள் நிற்றிமுன் கழறும்
ஓமெனப்படு மொழிப்பொரு ளியம்புகென் றுரைத்தான்.

"ஓமெனப்படுங் குடிலையே ஒப்பிலாமுருகன் மாமுகத் துள் ஒன்றும்" ஆதலின் முருகப் பெருமான் நகைத்துக் கேட்டலும், நான்முகன் பொருள் அறியானுய் மருள் கொண்டு, எட்டுக் கண்களையும் மேலுங்கீழுமாக விழித்த னன்; வெட்க முற்றனன்; விக்கினன்; தியங்கினன்; மயங்கி னன்; என் செய்வது என்று ஏங்கினன். சிவமூர்த்தியிடம் ஆதிகாலையில் தான் வேதத்தை யுணர்ந்தபொழுது ஓம் என்ற முதல் எழுத்து வெறுமையாக உள்ள எழுத்து என்று பொருள் கேளாது விட்டதன் அறியாமை குறித்து வருந்தினன்.

முகத்தி லொன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டிலன் அப்பொருள் திறனே.

பிரணவமானது சிவபெருமானுக்குப் பீடமாகும்; ஏனைய தேவர்கட்குப் பிறப்பிடமாகும்; எல்லா எழுத்துக் கும் வேதங்கட்கும் ஆதியாகும்; காசியம்பதியிலே இறந் தவர்கட்கு விஸ்வேஸ்வரன் கூறுவதும் தாரகம் ஆகிய இப் பிரணவ மொழியேயாகும். தாரகம் - தாண்டச்செய்வது; பிறவிக் கடலினின்றுங் கடக்கச்செய்வதனுல் பிரணவ மந் திரம் "தாரகம்" எனப்படும். காசியிலே இறந்தார்க்கு சிவ பெருமான் காதில் உபதேசிப்பது இத் தாரகமேயாகும்.

ஈசன் மேவரு பீடமாய் ஏனையோர் தோற்றும்
வாசமா யெலா எழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறும்
மாசில் தாரகப் பிரமமாம் அதன்பயன் ஆய்ந்தான்.

வேதங்களை ஓதுவதற்கு முன்னும் பின்னும் கூறுவது பிரணவமேயாம். அதன் உண்மைப் பொருளையுணராது படைப்புத் தொழிலையாற்றும் பெருங்கடவுளாகிய பிரம தேவன் மயங்கினன் என்றால் சிற்றறிவும் சிறுதொழிலும் படைத்த நம்போன்றார் அதனை யறிந்தோம் என்பது நகைப்புக் கிடமாகும்.

தாமறைக் கெலா மாதியு மந்தமுஞ் சொல்லும்
ஓமெனப் படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப் பெருங் கடவுளு மயங்கினு னென்ருல்
நாமினிச் சில அறிந்தன மென்பது நகையே.

இங்ஙனம் மயங்கிநின்ற பிரமதேவனைக் குமரவேள் தமது திருக்கரத்தாற் குட்டி கந்தவெற்பிற்கொண்டுபோய் சிறைக்கூடத்தில் காலில் தளைபூட்டிக் காவலில்இருத்தினர்.

**தனிவேலெடுத்து ................ வரும் எங்கோன்:—**

முருகப் பெருமான் வடிவேலாயுதத்தை எடுத்து வந்ததைக்கண்டு கடல் ஓலமிட்டது; கிரவுஞ்சவெற்பு ஓவென்று கதறிப் புலம்பியது.

"வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலை வெற்பு மிடிந்து திடீல் திடீலென
*    *    *    *    *
வேலெடுத்து நடந்த திவாகராசல"

**எங்கோனறியின் இனி நான்முகனுக் கிருவிலங்கே:—**

பிரமதேவன் எனக்கு மீண்டும் பிறப்பினை யுண்டாக்கக் கருதி விதிவிலக்கு எழுத நினைப்பானுயின், முன் முருகவேள் அவனது காலில் இட்டது ஒரு விலங்கு; இப்போது எம்பெருமான் இருவிலங்கு இடுவான்.

"தன்பால்செய்யும் அபராதத்தினும் தன் அடியார்பால் செய்யும் அபராதம் மிகவும் கொடியது. ஆதலின் தன்பால் தவறியபோது பிரமனுக்கு ஒரு விலங்கிட்டனர். தன் அடிமையாகியஎன்பால் தவறும் நான்முகனுக்கு இருவிலங்கிடுவார்" என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றனர்.

இதனுல் ஆறுமுகப் பெருமானை மெய்யன்புடன் வழிபடும் அடியார்க்கு பிறவாமை தானே வரும்.

"வனஜ ஜாதனை யன்று முனிந்தற
வலிய பார விலங்கிடு புங்கவன்"

"அநுபவ சித்த பவக்கடலிற் புகாதெனை
வினவி யெடுத்தருள் வைத்த கழற் க்ருபாகரன்"

பெறுதற்கரிய மனிதப் பிறப்பினுல் பெறும்பேறு பிறவாமை யொன்றேயாம். அதுவே பெரியோர்கள் அனைவரும் வேண்டுவது.

உ

முருகா

# பெரிய புராணம்.

(௱எசு-ம் பக்கத் தொடர்ச்சி)

## திருக்கூட்டச் சிறப்பு.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவாரூரிலே, புற்றிடங்கொண்ட ஆதிதேவர் அமர்ந்திருக்கும் திருக்கோயிலில் ஒருபுடை "தேவாசிரியன்" என்னும் பெயருடைய திருமண்டபம் ஒன்று விளங்கும். திருமூலநாதரைச் சேவிக்க வரும், மால்,

---

**இப்பாடலில் பிரமனைப் படர்க்கையில் வைத்துக் கூறுகின்றனர். கந்தரந்தாதியில் முன்னிலைப் படுத்தி மிக அழகாகக் கூறுமாறு காண்க.**

தீட்டப் படாவினி யுன்ருலென் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன் யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா சலன்சிறை விட்டவன்ருள்
தீட்டப் படாவி வனையே நினைவன் றிசாமுகனே.

(**பொருள்**) திசாமுகனே - ஏ பிரமதேவனே! என் சென்னி இனி உன்ருல் தீட்டப்படா - எனது தலையில் விதியை இனிமேல் உன்னுலே எழுதப்படாது; கறை பிறப்பில் தீட்டப்படு ஆவியவர் அல்லன் யான் - உதிரம் முதலியவற்ருல் நிறைந்த கருவில் பிறத்தலினுல் அசுசியடைகின்ற உயிர்களையுடையவரைப்போல யான் ஆக மாட்டேன்; திக்கு நான்மருப்பு தீட்டு அ படா வித முகாசலன் - எட்டுதிசைகளிற்போய் தனது நான்கு கொம்புகளையும் கூர்மையிடுகின்றதும் அந்த பட்டமும் சித்திரவிதங்களும் பொருந்தியதும் முகத்தை யுடையதுமாகிய மலைபோன்ற ஐராவதத்தின்மீது வருகின்ற இந்திரனுடைய, சிறை விட்டவன் தாள் - சிறையை யகற்றிய திருமுருகனுடைய திருவடியை, தீட்ட - அடைய, படா - ஒருபோதும் அழிவில்லாத, இவனையே நினைவன் - இந்த குமரக்கடவுளைச் சிந்திப்பேன். (ஆதலினுல் பிரமனே! இனி உன்னுல் என் தலை எழுதப்படாது)

### கருத்துரை.

**பிரமதேவன் மீட்டும் என்னை பிறக்கக் கருதுவானுகின் அதனை முருகவேளறிந்தால் அப்பிரமனுக்கு இருவிலங்கிடுவர்**

அயன், இந்திரன் முதலிய இமையவர்கள் அங்கு அளவற்ற அன்புடன் குழுமியிருப்பர். ஆயிரங் கால்களையுடைய அத் திருமண்டபம் அளவற்ற மகிமையுடையது. இன்னும் அம்மணிமண்டபத்தில் பற்பல சிவனடியார்கள் கூடியிருப்பர். அவ்வடியார்கள் உடம்பிலணியுந் திருநீறுபோல் உள்ளமும் தூய்மையுடையவர்கள்; அவர்கள் தமது திருமேனியினின்று வீசும் ஒளியினால் திசைகளை விளக்குபவர்கள்; பேசவொண்ணுப் பெருமையுடையவர்கள்; ஐம்பெரும்பூதங் கலங்கினும் எம்பெருமானை மறவாதவர்கள்; அன்பின் உறைப்புமிக்க திருத்தொண்டின் நெறிநின்றவர்கள்; கோதிலாத குணப்பெருங் குன்றனையர்கள்.

**கேடும் ஆக்கமுங் கெட்ட திருவினர்**
**ஓடுஞ் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்**
**கூடும் அன்பினில் கும்பிட லேயன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினர்.**

திருநீறுங் கண்டிகையும் பூண்டவர்கள்; ஈரமும் வீரமும் பூண்டவர்கள்; குறைவிலா நிறைவுடையவர்கள்; விருப்பும் வெறுப்பும் அற்றவர்கள்; அசையாதஉள்ளமும், அன்பின் வெள்ளமும் உடையவர்கள்; தைலதாரைபோல் இடையறாது இறைவனை நினைக்குந் திருவுடையவர்கள்; கருவாழ்வு தவிர்த்த பெருவாழ்வு பெற்றவர்கள்; மருளாளர்காணாத அருளாளர்கள்; சீலமும் தவக்கோலமுங்கொண்டவர்கள். இத்தகைய திருத்தொண்டர்களைத் துதித்த ஆலால சுந்தரரது அவதாரத்தையும், அவரது வரலாற்றையும், அவரால் கூறியருளப்பெற்ற திருத்தொண்டத்தொகையின்முறையே திருத்தொண்டர்களது தூய வரலாறுகளையும், உங்களுக்குத் திருவருள் உணர்த்த உரைப்போம்" என்று உபமன்னிய முனிவர் திருவாய் மலர்ந்தருளிச் செய்வாராயினர்.

---

## பெரியபுராண விளக்கம்.

காண்டம் 2 சர்க்கம் 13 திருவிருத்தம் 4253
**தனி அடியார்கள் 63** தொகை அடியார்கள் 9.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திருமறையோர் புராணம் | 13 | குயவர் | புராணம் | 1 |
| சிவவேதியர் | " | 5 | செக்கார் | " | 1 |
| மாமாத்திரர் | " | 1 | பரதவர் | " | 1 |
| முடிமன்னர் | " | 6 | சான்றார் | " | 1 |
| **குறுநிலமன்னர்** | " | 5 | **ஏகாலியர்** | " | 1 |



| | | | | | |
|---|---|---|---|---|---|
| வணிகர் | " | 5 | வேடர் | " | 1 |
| வேளாளர் | " | 13 | புலையர் | " | 1 |
| ஆயர் | " | 2 | பாணர் | " | 1 |
| சாலியர் | " | 1 | மரபறியாதவர் | " | 13 |

### திருமறையோர் 13.

| | |
|---|---|
| தில்லைவாழந்தணர் | சண்டேசுர நாயனுர் |
| குங்கிலியக்கலயர் | சோமாசிமாற நாயனுர் |
| முருக நாயனுர் | நமிநந்தி நாயனுர் |
| உருத்திர பசுபதி நாயனுர் | திருஞான சம்பந்த நாயனுர் |
| சிறப்புலி நாயனுர் | அப்பூதி நாயனுர் |
| கணநாத நாயனுர் | திருநீலநக்க நாயனுர் |
| பூசலார் நாயனுர் | |

### ஆதிசைவர் (சிவவேதியர்) 5.

முப்போதும் திருமேனி தீண்டுவார்

| | |
|---|---|
| புகழ்த்துணை நாயனுர் | சடைய நாயனுர் |
| சுந்தரமூர்த்தி நாயனுர் | இசைஞானியார் |

**மாமாத்திரர் 1** சிறுத்தொண்டர்

### முடிமன்னர் 6.

| | |
|---|---|
| கோச்செங்கட்சோழர் | நின்றசீர்நெடுமாறர் |
| புகழ்ச்சோழர் | சேரமான் பெருமாள் |
| மங்கையர்க்கரசியார் | இடங்கழியார் |

### குறுநில மன்னர் 5.

| | |
|---|---|
| நரசிங்க முனையரையர் | மெய்ப்பொருள் நாயனுர் |
| கூற்றுவநாயனுர் | ஐயடிகள் காடவர்கோன் |
| கழற்சிங்க நாயனுர் | |

### வணிகர் 5.

| | |
|---|---|
| காரைக்காலம்மையார் | அமர்நீதி நாயனுர் |
| மூர்த்தி நாயனுர் | இயற்பகை நாயனுர் |
| கலிக்கம்ப நாயனுர் | |

### வேளாளர் 13.

| | |
|---|---|
| மூர்க்க நாயனுர் | திருநாவுக்கரசு நாயனுர் |
| செருத்துணை நாயனுர் | சாக்கியநாயனுர் |
| வாயிலார் நாயனுர் | மானக்கஞ்சாற நாயனுர் |
| கோட்புலி நாயனுர் | விறன்மிண்ட நாயனுர் |
| சத்தி நாயனுர் | முனையடுவார் நாயனுர் |
| அரிவாட்டாய நாயனுர் | ஏயர்கோன்கலிக்காம நாயனுர் |
| இளையான்குடிமாற நாயனுர் | |

ஆயர் 2. திருமூல நாயனுர் ஆனய நாயனுர்

| | | |
|---|---|---|
| சாலியர் | 1 | நேச நாயனார் |
| குயவர் | 1 | திருநீலகண்டர் |
| செக்கார் | 1 | கலியநாயனார் |
| பரதவர் | 1 | அதிபத்த நாயனார் |
| சான்றார் | 1 | ஏனாதி நாயனார் |
| ஏகாலியர் | 1 | திருக்குறிப்புத்தொண்டநாயனார் |
| வேடர் | 1 | கண்ணப்ப நாயனார் |
| புலையர் | 1 | திருநாளைப்போவார் நாயனார் |
| பாணர் | 1 | திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் |

மரபறியாதவர் 13.

குலச்சிறையார் பரமனையேபாடுவார்
தண்டியடிகள் சித்தத்தைச் சிவன்பால் வைத்தார்
கணம்புல்லர் திருவாரூர்ப்பிறந்தார்
எறிபத்தர் பொய்யடிமையில்லாதபுலவர்
காரியார் முழுநீறுபூசியமுனிவர்
பெருமிழலைக்குறும்பர் அப்பாலுமடிசார்ந்தார்
பத்தராய்ப்பணிவார்

குருவருளால் முத்திபெற்றவர் 11.

திருஞானசம்பந்தர் திருநீலகண்டயாழ்ப்பாணர்
திருநாவுக்கரசர் பெருமிழலைக்குறும்பர்
திருமூலர் கணம்புல்லர்
நின்றசீர்நெடுமாறர் அப்பூதியடிகள்
மங்கையர்க்கரசியார் சோமாசிமாறர்
குலச்சிறையார்

சிவலிங்கத்தால் முத்திபெற்றவர் 31.

எறிபத்தர் கலியனார்
குங்குலியக்கலயர் காரியார்
முருகனார் அதிபத்தர்
கண்ணப்பர் திருநீலநக்கர்
ஆனாயர் பூசலார்
அரிவாட்டாயனார் கணம்புல்லர்
மூர்த்தியார் கோட்புலியார்
சண்டேசுரர் நமிநந்தியடிகள்
திருநாளைப்போவார் கழற்சிங்கர்
சேரமான் பெருமாள் வாயிலார்
சாக்கியனார் செருத்துணையார்
கூற்றுவனார் புகழ்த்துணையார்
தண்டியடிகள் ஐயடிகள் காடவர் கோன்
சிறப்புலியார் கோச்செங்கட் சோழர்
உருத்திரபசுபதியார் சுந்தரமூர்த்தி நாயனார்
கலிக்காமர்



அடியார்வழிபாட்டால் முத்திபெற்றவர் 21.

திருநீலகண்டர் ஏனாதி நாதர்
இயற்பகையார் புகழ்ச்சோழர்
மூர்க்கனார் மானக்கஞ்சாறர்
சிறுத்தொண்டர் இளையான்குடிமாறர்
திருக்குறிப்புத்தொண்டர் காரைக்காலம்மையார்
விறன்மிண்டர் நரசிங்கமுனையரையர்
இடங்கழியார் கலிக்கம்பர்
முனையடுவார் நேசனார்
சத்தியார் இசைஞானியார்
அமர்நீதியார் சடையனார்
மெய்ப்பொருளார்

இயற்றமிழும் இசைத்தமிழும் வல்லவர் 4.

திருஞானசம்பந்தர் காரைக்காலம்மையார்
திருநாவுக்கரசர் சுந்தரமூர்த்தி நாயனார்

இசைத்தமிழ் வல்லவர் 4.

திருநாளைப்போவார் திருநீலகண்டயாழ்ப்பாணர்
ஆனாயர் பரமனையே பாடுவார்

இயற்றமிழ் வல்லவர் 5.

ஐயடிகள் காடவர்கோன் பொய்யடிமையில்லாத புலவர்
திருமூலர் சேரமான் பெருமாள்
காரியார்

சமயகுரவர் வயதும் நட்சத்திரமும்.

| | | |
|---|---|---|
| அப்பர் | 81 | சித்திரை சதயம் |
| சம்பந்தர் | 16 | வைகாசி மூலம் |
| சுந்தரர் | 18 | ஆடி சுவாதி |
| வாதவூரர் | 32 | ஆனி மகம் |

(தொடரும்)

உ

முருகா

# மதிநலம்படைத்தமைந்தன்

மூன்றுநாள்களாக ஒழியாமல் மழை பொழிந்து கொண்டிருந்தது. பறவைகள் எல்லாம் மரங்களில் பதுங்கிக்கொண்டு பசியுடன் உணவின்றித் தவித்துக்கொண்டிருந்தன. எங்கும் ஒரே இருள். தண்ணீர் வெள்ளமாக ஓடிக்கொண்டிருந்தது. மங்கம்மாள் வீடு ஊர்க் கோடியில் இருந்தது. வீடு முழுவதும் ஒழுக்கல். ஒரு மூலையில் சிறுவிளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. பழங்கஞ்சியைக் குடித்த பவசேனன் எங்கும் ஈரமாக இருந்தபடியால் படுக்கஇடமின்றித் தவித்தான். "அம்மா! நான் எங்கம்மா படுப்பது? குளிர்கின்றது. போர்த்துக் கொள்ளத் துணி கொடு அம்மா" என்று கேட்டான். அவன் தாய் மங்கம்மாள் ஒரு துணியை எடுத்துக் கொடுத்து ஈரத்தரையில் ஒரு கிழிந்த பாயைப் போட்டு, "கண்ணே! இப்படிப் படுத்துக் கொள்" என்ருள். பவசேனன், "அம்மா! இந்தத் துணி ஏதம்மா? இவ்வளவு பெரியதாக இருக்கின்றதே?" என்று கேட்டான். மங்கம்மாள், "கண்ணே! இது உங்க அப்பாவுடையது" என்ருள். பவசேனன், "அம்மா! எங்க அப்பா எங்கே? நான் ஒருநாளும் பார்க்கவே இல்லையே?" என்ருன். மங்கம்மாள் வருந்திய உள்ளத்துடன், 'கண்ணே! உன் தகப்பஞர் வெளியூருக்குப் போயிருக்கின்ருர்' என்ருள். பவசேனன் 'அம்மா! அப்பா எப்போது வருவார்கள்? அம்மா! அம்மா! அப்பாவைப் பார்க்கவேணும் என்று எனக்கு நிரம்ப ஆசையாக இருக்கின்றது' என்ருன். மங்கம்மாளுக்கு அவன் கேள்விகள் பெரிய வேதனைத் தீயைத் தூண்டியது. தனது பழைய செல்வ நிலைமையும், தானுந் தன் கணவனும் பெருந் தனத்துடன் மாடி வீட்டில் வாழ்ந்த வாழ்க்கையும், குழந்தை யில்லையென்று காசி ராமேஸ்வரம் போய் தானதருமங்கள் செய்ததும், ஆறுமாதக் கருவுற்றிருந்தபோது தன் கணவன் மாண்டுபோனதும், தாயாதிகள் மிகுந்த வன்கண் செய்து 'வீடு வாசல் நிலபலங்களையெல்லாங் கவர்ந்துகொண்டு அடாத பழியைச் சுமத்தி தன்னை அடித்து விரட்டியதும், தான் இப்போது உடுக்க உடையும்



உண்ண உணவுமின்றித் தவிப்பதும் ஆக இப்படித் தனது பழய பெருமைகளும் புதிய சிறுமைகளும் ஒன்றன்பின் ஒன்ருக, தன் மனக்கண்முன் காட்சி தந்து மறைந்துகொண்டே இருந்தன. தனது துன்பத்தை உள்ளுக்குள் அடக்கிக்கொண்டு, 'அன்புள்ள அருமைமகனே! உனது அப்பா இப்போது வரமாட்டார்; நீ பெரியவனுகி நன்ருகப் படித்துக் கெட்டிக்காரனுக ஆனல் தான் வருவார்'. இப்படித் தாயும் மகனும் பேசிக்கொண்டிருந்தனர். மழை விட்டபாடில்லை. ஒருவாறு மகன் தூங்கிவிட்டான். மங்கம்மாளுக்குத் தூக்கம் வரவில்லை. கணவனைக் குறித்த ஏக்கம் வந்தது. கண்ணீர் ஆறுபோல் பெருகியது; மழைத் தண்ணீரோடு கலந்தது. மழைநீர் குளிர்ந்தும், கண்ணீர் வெதும்பியும் இருந்தன. எப்படியோ இரவுப்பொழுது கழிந்தது.

மறுநாள் பள்ளிக்கூட விடுமுறை. பிள்ளைகள் எல்லாம் வீதியில் மழைத் தண்ணீரில் விளையாடிக் கொண்டிருந்தனர். சிலபிள்ளைகள் நீரில் மிதந்து போகும் நீர்க்குமிழியைப் பிடித்து எடுக்க முயன்றனர். சில பிள்ளைகள் மண்ணைக் குவித்து அணை போட்டு நீர் ஓட்டத்தை ஒருபுறம் தடுத்தனர். ஒருவர்மேல் ஒருவர் சேற்றை வாரி இறைத்தனர். பவசேனன் ஒரு கடிதத்திஞல் கப்பல் செய்து ஓடுகின்ற மழைநீரில் மிதக்க விட்டனன். அது நன்ருக மிதந்து அசைந்து அசைந்து செல்வதைக் கண்டு அடங்காத ஆனந்த வெள்ளம் அவன் மனவீதியில் ஓடியது. உடனே அவன் காலையுயர்த்தி ஆடிப்பாடினுன். இதனைக் கண்ட எதிர்வீட்டு நாகையன் அழகாக மிதந்து செல்லும் கப்பலை எடுத்துக் கிழித்து எறிந்து விட்டான். பவசேனனுக்கு கோபமும் தாபமும் வளர்ந்தன. ஓடி நாகையன் கன்னத்தில் ஒரு அறை கொடுத்தான்; 'என் கப்பலை ஏண்டா கிழித்தனை' என்று சினந்து கேட்டான். நாகையன் அழுது கொண்டே அவன் தந்தையிடம்போய் 'அப்பா! எதிர்வீட்டு பவன் என் கன்னத்தில் ஓங்கி அடித்தான்' என்று கூறி முறையிட்டான். அவன் தந்தைக்கு உடனே பிரளய காலருத்திரனுக்கு வருவது போல் கோபம் தலைக்குமீறி வந்துவிட்டது. 'பவசேனன் ஏன் உன்னை அடித்தான்' என்று கேட்டுத் தெளியவில்லை. ஓடிவந்தார். தகப்பனில்லாத தறுதலையே! 'என்மகனை ஏண்டா அடித்தாய்? நாதனற்ற நாசக்காரா?' என்று வைது பவசேனன் கன்னத்தில் ஐந்தாறு அடியைத் தந்தனர். பெரியவர் அடியைச் சிறு

குழந்தை தாங்குமா? கன்னங்கள் சிவந்தன; உதடு துடித்தது. பொறுக்கமுடியாத வேதனையால் கண்ணீர் சிந்தியது.

பவசேனன், 'ஐயா! ஏனையா என்னை அடிக்கின்றீர்? என் கப்பலை அவன் கிழித்துவிட்டான். அதனால்தான் நான் அடித்தேன். உண்மையை உணராமல் என்னை அடிக்கின்றீரே?'' என்று அழுதான். அந்த பெரியவர், "ஆமாம்; உன் கப்பல் கிழிந்து போனதாலே உங்கள் அப்பாவுடைய கப்பலே முழுகிப் போய்விட்டதோ? பேசினால் இன்னும் அடிப்பேன்'' என்று அதட்டிவிட்டு தன் மகனை அழைத்துக்கொண்டு வீட்டிற்குள் சென்றார்.

பவசேனன் விம்மிவிம்மி அழுதுகொண்டே தாயிடம் சென்று அவள் மடியைப் பிடித்துக்கொண்டு அலறினன். மங்கம்மாள் மகனைஎடுத்துஅணைத்து அவன்கண்ணீரைத்துடைத்து "கண்ணே! ஏன் அழுகின்றாய்? ஆர் உன்னை அடித்தது? ஐயோ! ஏன் உன் கன்னங்கள் இப்படி தடித்தும் சிவந்தும் இருக்கின்றன?'' என்று பரிந்து கேட்டாள். பவசேனன், "அம்மா! நான் கப்பல் செய்து தண்ணீரில் விளையாடினேன்; எதிர்வீட்டு நாகையன் அதனைக் கிழித்துவிட்டான்; நான் அவனை ஒருஅடி அடித்தேன்; அவன் அப்பாவந்து என்னை வைது பலமுறை ஓங்கி அடித்தனர். அம்மா! எங்க அப்பா இருந்தால் அந்த பையனையும் அடிப்பாரல்லவா? நீ வேணுமென்றே அப்பாவை ஒளிக்க வைத்திருக்கின்றாய். அம்மா! அப்பா எங்கே சொல்லு. அப்பாவிடம் சொல்லி நாகையனை அடிக்கச்சொல்வேன்'' என்று விம்மி விம்மி அழுதுகொண்டே கூறினன். மங்கம்மாள் தனது மகனுக்குப் பதில்கூறமுடியாமல் அவனை எடுத்துத்தழுவி கண்ணீரைத் துடைத்து, தின்பண்டந் தந்து சமாதானஞ் செய்தாள்.

ஒருநாள் பள்ளியில் பிள்ளைகள் எல்லாம் தங்கள் தங்கள் பாடங்களைப் படித்துக்கொண்டிருந்தார்கள். உபாத்தியாயர் பிள்ளைகளை நோக்கி, "ஒரு தந்தை; அவனுக்கு நான்கு மைந்தர்கள்; அவனுடைய சொத்து 77 ஆயிரம். அந்தத் தந்தைக்கு முதன்மைந்தனிடம் அளவற்ற பிரியம். தனது சொத்தைப் பகிர்ந்து பிள்ளைகளுக்குக் கொடுக்க எண்ணினர். மூன்று பிள்ளைகளுக்கு ஆளுக்கு 11 ஆயிரந் தந்தார். மிகுதியை மூத்தவனுக்குக் கொடுத்தார். அப்படியானல் மூத்தபிள்ளைக்கு என்னவரும்? சொல்லுங்கள்'' என்று கேட்டார். பிள்ளைகள்எல்லாம், 'ஐயா! மூத்தவனுக்கு 44ஆயிரம் வரும்' என்றார்கள். பவசேனன்மட்டும்



சும்மா இருந்தான். அவனுக்குக் கணக்குத் தெரியவில்லையென்று மற்றப் பிள்ளைகள் கருதி நகைத்தனர். ஆசிரியர், 'பவசேன! நீ ஏன் சும்மா இருக்கின்றாய்? மூத்தவனுக்கு என்னவரும்?' என்று கேட்டார். பவசேனன் எழுந்து, 'ஐயா! மூத்தவனுக்கு 'நமக்கு அதிகப்பணம் வந்துவிட்டதே' என்று அகங்காரம்வரும். பிள்ளைகளைச் சமமாகப்பார்த்துப் பங்கிடாத தந்தைக்குப் பாவம் வரும்' என்றான். ஆசிரியர் திடுக்கிட்டார். இப்படிக் கூறுவான் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. 'பவசேன! பேஷ்! நீ இந்த விடையை எவ்வாறு கண்டுபிடித்தனை?' என்று கேட்டார். பவசேனன், 'தாங்கள் மூத்தவனுக்கு 'எவ்வளவுவரும்' என்று கேட்கவில்லை. 'என்ன வரும்' என்றுதானே கேட்டீர். அந்தக் கேள்வியில் அந்த விடை நுட்பமாக அடங்கி யிருக்கின்றது' என்றான். ஆசிரியர் உள்ளுக்குள் அவன் மதிநுட்பத்தை மெச்சி மகிழ்ந்தார். ஏனைய பிள்ளைகள் வியப்புற்றனர். பின்னர் ஒருசமயம், பரிட்சையில் பலகேள்விகளுக்கு இடையில் "மனிதனை உயர்த்துவது எது?'' என்று ஒருகேள்வி இருந்தது. அதற்குப் பிள்ளைகள் பல்வேறு விடைகள் தத்தம் மனநிலைக்குத் தக்கவாறு விடை எழுதிவைத்தார்கள்; ஒருவன், மனிதனை உயர்த்துவது பணம் என்று எழுதினன்; ஒருவன், மனிதனை உயர்த்துவது பதவி என்று எழுதினன்; ஒருவன், மனிதனை உயர்த்துவது அறிவு என்று எழுதினன்; ஒருவன், மனிதனை உயர்த்துவது அதிர்ஷ்டம் என்று எழுதினன். பவசேனன், "மனிதனை உயர்த்துவது அடக்கம்; அடக்கம் அமரருள் உய்க்கும் (திருவள்ளுவர்)'' என்று எழுதினன். ஆசிரியர் எல்லாவிடைகளையுஞ் சீர்தூக்கி நோக்கினர். மனிதனை உயர்த்துவது அறிவும் அதிர்ஷ்டமும் என்றாலும், அடக்கமில்லாத அறிவும், அடக்கமில்லாதவனுக்கு வந்த அதிர்ஷ்டமும் பரிமளிக்காது. அடக்கமே சிறந்தது என்ற விடை மிகவும் சாலச் சிறந்தது என்று முடிவு செய்தார். இப்படியே பவசேனன் கூறும் விடைகள் யாவும் நுட்பமும் திட்பமும் வாய்க்கப்பெற்றனவாகத் திகழும்.

இவ்வாறு பவசேனன் பள்ளியில் அன்னத்திற்கும் ஆவிற்கும் உவமையாகத் தலைமாணக்கனாக விளங்கினன். பவசேனனுக்கு வயது பன்னிரண்டு ஆயிற்று. கலைகள் யாவும் அவனைத் தேடிக்கொண்டுவந்து அடுத்தன. நாள்தோறும் காலையில் எழுந்து நீராடி, நீறு பூசி, இறைவழிபாடு செய்து, பசியாறி, தாயை வணங்கி விடைபெற்றுக்கொண்டு கையில் சிறந்த நூல்களைத் தாங்கிக்கொண்டுப் பள்ளிக்குச் செல்லுவான்.

அந் நகரத்தை யாளுகின்ற மன்னன் மந்தமதியினன்; முன் கோபி; தீர்க்காலோசனை யில்லாதவன்; அவசரக்காரன்; தற் பெருமை யுடையவன்.

ஒருநாள் இரவு பவசேனன் நெடுநேரம் தனது பாடங்களை ஆழ்ந்த சிந்தனையுடன் படித்தனன்; களைப்புற்று படுத்து உறங் கினான். மறுநாள் சற்று காலதாமதமாக எழுந்தான். அதனால் நீராடவும், வழிபாடுசெய்யவும் போதிய நேரமில்லை. குளியாம லும் வழிபாடு செய்யாமலும் உணவுகொள்கின்ற வழக்கம் அவனிடமில்லை. அதனால் விரைவாக வாய் முகம் கை கால்களைக் கழுவி, நீறு பூசி, புத்தகங்களை எடுத்துக்கொண்டு விரைந்து பள்ளிக்குச் சென்றுகொண்டிருந்தான். மன்னனது மாளிகை யின் பக்கமாகப் போய்க்கொண்டிருக்கும் அதேநேரத்தில் மேல் மாடியில் மன்னன் நித்திரையைவிட்டெழுந்து வீதியை எட்டிப் பார்த்துத் திரும்பினான். சன்னலின் மேற்படி தனது தலையில் மோதியது. அதனால் தலைமண்டையில் சிறிது அடிபட்டு உதிரங் கண்டுவிட்டது. உடனே அரசனுக்குச் சீற்றம் உண்டாகியது. வீதியில் அமைதியின் வடிவமாகப் பள்ளிக்குச் சென்றுகொண் டிருந்த பவசேனனை எழுந்தவுடன் பார்த்ததன்பயனாகத்தான் தனது தலையில் அடிபட்டதென்றும், இன்னும் இதுபோல் நாள்தோறும் இவன்முகத்தில் விழிப்பதனால் பலருக்குந் தன் போல் அடிபட்டுத் தீங்கு நேரும் என்றும் எண்ணினான். உட னே ஏவலரை அழைத்து பவசேனனைக் காட்டி, 'அவனைக் கொண்டுபோய் கொலைக்கூடத்தில் கொன்றுவிடுங்கள்' என்று பணித்தான். உடனே ஏவலர்கள் கட்டளையிட்டவாறு கொலை ஞர்கள் பவசேனன்கரத்தில் விலங்கிட்டு இளங்கன்றுபோல் தெருவில் இழுத்துக்கொண்டு சென்றனர். இதனைக்கண்ட நகர ஜனங்கள் பலவாறு கூறி வருந்தினர்.

**இம்மகன் யாரோ என்பார்; இவன்பிழை யாதோ என்பார்**
**அம்மகன் மனமோ மன்னற் கருமதி யிலையோ என்பார்;**
**வெம்மகன் முருகன் தானோ விபுதர்கோன் மகனோ என்பார்;**
**தெம்மகன் போலும் என்பார்; தெய்வமே காத்தி என்பார்.**

இதனைக்கேட்ட தாய் மங்கம்மாள் இடியேறுண்ட நாகம் போல் நடுநடுங்கி, வயிறு புடைத்து, கண்ணருவி பொழிய, துன்பமே ஒருவடிவு பெற்று அழுதுகொண்டு வருவதுபோல் மகனே! மகனே! என்று வாய்விட்டுப் புலம்பிகொண்டு வந்தாள். மகனைக் கொலைஞர்கள் அழைத்துப் போனார்கள் என்று இடை



யில் உள்ளவர்கள் சொன்னார்கள். அவள் பெற்ற வயிறு பகீர் என்று பற்றி எரியலாயிற்று. "அந்தோ! மகனே! நீ ஆறு மாதக்கருவில் தந்தையை இழந்தாய். உன்னுடைய அளவற்ற சொத்துக்களைத் தாயமார்கள் அபகரிக்க நீ வறுமையில் வாடி னாய். என் கண்ணே! உன்னைக் காணும்போதெல்லாம் என் உள்ளங் குளிருமே. உனது முத்துபோன்ற பொன்மொழிகளைக் கேட்குந்தொறும் என்செவி குளிருமே. உனது அரிய மதிநலத் தை எண்ணுந்தொறும் என் இதயங் குளிருமே. என் மாணிக் கமே! இப்பொழுதுதானே நீ எழுந்து பள்ளிக்குப் போனாய். என்னகுற்றத்திற்காக உன்னைக் கொலைஞர்கள் கொலை செய்யக் கொண்டுபோனார்கள். ஐயோ! நீ ஒருசிறு துரும்பையுங் கிள்ள மாட்டாயே. உன்காலின்கீழ் அகப்பட்ட எறும்பும் நசுங்காதே. உனக்கு இந்த தீங்கு வந்ததே. உன்னைப் பிரிந்து பாவியாகிய நான் இந்த பாரில் வாழேன். என் உயிரே!

**கரும்பே! பவசேனா! கண்மணியே! உள்ளம்**
**இரும்பேயோ? மன்னவனுக் கேதுபிழை செய்தாய்?**
**துரும்பே இவ்வாழ்க்கை துறந்தே னென்னுவி**
**விரும்பேன் விரும்பேன் விதியோ? இளஞ்சேயே!"**

என்று அழுவாள்; 'முருகாமுருகா! ஏழையேன் என்செய்வேன்? அம்பிகைபாலா! ஆரணமூலா! என் குழந்தையைக் காப்பாற்று. அப்பனே! என்மகன் உனக்கு அடைக்கலம். என் ஐயனே! இன் னும் இந்த ஏழையைச் சோதிக்காதே; சோதித்ததெல்லாம் போதும். கருணைக்கடலே! கதிர்வேலாயுதக்கடவுளே!' என்று தொழுவாள்; மூர்ச்சித்து அடியற்ற மரம்போலே விழுவாள்; ஆற்றுவாருந் தேற்றுவாரும்இன்றித்தானே தேறி எழுவாள்.

அவளுடைய ஆற்றொணாத துன்பத்தைக் கண்ட கல்லும் உருகியது. ஊரார்கள் எல்லாம் அவளைக்கண்டு கண்ணீர் சொரிந்தனர். கொலைக்களம் ஓடி கொலைஞர் கால்மேல் வீழ்ந்து "ஐயா! என்மகனைக் கொல்லாதீர்கள். அவன் என்ன குற்றஞ் செய்தான்? அவனுக்குப்பதில் என்னைக் கொன்றுபோடுங்கள். நீங்கள் மக்களைப் பெறவில்லையா? உங்களுக்குக் கோடி வந்த னம்" என்று கதறியழுது வேண்டினாள். கொலைஞர், "அம்மா! அழாதே. விதியை வென்றவர் யார்? அரசனுடைய ஆணை; அரச னுடைய கட்டளைப்படி நாங்கள் இவனைக் கொல்கின்றோம்; இல்லையேல் எங்கள் உயிர் போய்விடும்" என்றார்கள். பவசே னன், "ஐயா! உங்களுக்கு வணக்கம். நான் ஒருகுற்றமும் செய்ய வில்லை. நிரபராதியாகிய என்னை உங்கள் அரசர் கொல்லச்

சொல்வதற்கு நியாயமில்லை. அரசர் ஒருவேளை வேறு யாரையாவது கொல்லச்சொல்லி இருக்கலாம். அரசருடைய ஏவலர்கள் உங்களுக்கு மாறுபாடாக என்னைக் காட்டியிருக்கலாம். மன்னர் பெருமான் நேர்முகமாக உங்களுக்குக் கட்டளை யிடவில்லையே. என்வார்த்தையை நீங்கள் சற்று நிதானமாக ஆராய்ந்துபாருங்கள். வேறு ஒருவனைக் கொல்லச்சொல்லியிருந்து, மாருக என்னைக் கொன்றுவிட்டால் பின்னர் உங்கட்குப் பெரும் ஆபத்தாக முடியும். என்னை அழைத்துக்கொண்டுபோய் அரசனுக்குக் காட்டுங்கள். என்னையே கொல்லுமாறு அரசர் கூறினுல் என்னைக் கொன்றுபோடுங்கள். அப்படி அரசனைக் கேட்டு செய்வதனுல் ஒன்றும் தவறு இல்லை. கேளாமல் செய்தால் தவறு ஏற்பட்டாலும் ஏற்படலாம். பதருக் காரியம் சிதருது. அவசரப்பட்டுக் கொன்றுவிட்டால் சென்றஉயிர் திரும்பாது. நான் சொல்வது உங்கள் மனதில் சரியென்றே படும். உங்களுக்கும் கடவுள் அறிவு படைத்திருக்கின்ருர்'' என்ருன். அவனுடைய ஆழ்ந்த கருத்துடைய அருமொழிகளைக் கேட்ட கொலைஞர் அவன் சொற்களுக்கு இணங்கினர். 'அப்படியே உன்னை அரசரிடம் காட்டியே கொல்வோம்' என்று அத்திருமகனை அரசவைக்கு அழைத்து ஏகினர். இளங்கன்றின்பின் செல்லும் தாய்ப்பசுபோல் மங்கம்மாள் கண்ணீரால் வீதியை நனைத்துக்கொண்டு சென்ருள். (தொடரும்)

---

## ஒழுக்கம்

மக்களாய்ப்பிறந்த நாம் ஒவ்வொருவரும் ஒழுக்க நெறியில் நிற்றல் வேண்டும். அவ்வொழுக்கம் பொறையுடைமை, அடக்கமுடைமை, அறிவுடைமை, கொல்லாமை, கொன்றதைத் தின்னுமை, புறங் கூருமை, களவாமை, பிறர்பொருள் வெஃவாமை, பிறர்மனைமேல் தீயபார்வை யில்லாமை, இறையன்புடைமை, இன்னணம் பல கிளைகளை யுடையது. உயிரில்லாத உடம்பு எப்படி ஒதுக்கப்படுமோ, அப்படி ஒழுக்கமில்லாதவனையும் அறிஞர்கள் ஒதுக்கிவிடுவார்கள்; இறையருளும் ஒதுக்கப்படும். உயிரினும் மிகமிக விழுமியது ஒழுக்கம். எனவே நந்தமிழ்மறையில்,

"ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்''

எனப்படுகிறது. அழுக்காறு உடையானிடத்து செல்வம் இல்லை; ஒழுக்கம் இல்லாதானிடத்து உயர்ச்சி இல்லை. ஒழுக்கமே மனிதனை உயர்த்துவது. வறுமை வந்தகாலத்தும் ஒழுக்கம் தவருது நடத்தல் வேண்டும். ஆகவே ஒழுக்கத்தில் ஒழுகுவோமாக; ஒழுக்கத்தை மறவாதிருப்போமாக.

